REGD. No: TN MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone 812818 | 4 பக்கம் விலை 35 காசு



**திடமனம்**

கண்டனத்தைத் தாங்கிக் கொள்ளும் திட மனம் இல்லையென்றால் கடமையை நிறைவேற்ற முடியாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**மெய்மை**

எத்தனை குழப்பம் நேர்ந்தாலும் பொய்மை மறைந்து விடும். மெய்மை மேலே உயர்ந்து நிற்கும்.

-அண்ணல் காந்தி



மலர்: 4 | சென்னை 8-1-1980 செவ்வாய் | (★) ❋ ● ❋ (★) | வெளியூர் 9—1—1980 புதன் | இதழ் 84

## கழக செயற்குழு அவசர கூட்டம்

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமைச் செயற்குழுவின் அவசரக் கூட்டம் 11-1-80 வெள்ளிக்கிழமை காலை 9 மணி அளவில் சென்னை இராயப்பேட்டை அவ்வை சண்முகம் சாலையில் உள்ள தலைமைக்கழக அலுவலகத்தில் நடைபெற உள்ளது.

அவைத்தலைவர் உயர்திரு. ஈ.வே அ. வள்ளிமுத்து அவர்கள் தலைமை வகிப்பார்கள்.

நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தல் குறித்தும், இதர முக்கிய பிரச்னைகள் குறித்தும் கூட்டத்தில் ஆலோசிக்கப்படும்.

**இரா. நெடுஞ்செழியன்**

சென்னை-14 பொதுச் செயலாளர்
8-1-80 அனைத்திந்திய அண்ணா தி மு க

## தமிழகத்தில் பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன், நகராட்சிகள்-சென்னை மாநகராட்சி ஆகியவற்றுக்கு

# ஏப்ரல் மாதம் தேர்தல்

### உள்ளாட்சித்துறை அமைச்சர் கா. காளிமுத்து அறிவிப்பு

சென்னை, ஜன. 8 தமிழகத்திலுள்ள ஊராட்சிகள், ஊராட்சி ஒன்றியங்கள், நகராட்சிகள், சென்னை மாநகராட்சி ஆகியவற்றின் தேர்தலை ஏப்ரல் மாதமே நடத்திவிடுவது என புரட்சித்தலைவர் அரசு முடிவு எடுத்துள்ளது. ஏப்ரல் மாதம் 21, 23, 25, 28 ஆகிய நான்கு தேதிகளில் நான்கு கட்டமாகத் தேர்தல் நடைபெறும் என்றும் ஏப்ரல் 28-ஆம் தேதியன்று சென்னை மாநகராட்சித் தேர்தலும் நடைபெறும் என்றும் உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து அறிவித்துள்ளார்.

தமிழகத்திலுள்ள ஊராட்சிகள் (பஞ்சாயத்துக்கள்) ஊராட்சி ஒன்றியங்கள் (பஞ்சாயத்து யூனியன்கள்) நகராட்சிகள் (முனிசிபாலிடிகள்) ஆகியவற்றின் தேர்தல்களையும் சென்னை மாநகராட்சித் தேர்தலையும் வரும் ஏப்ரல் மாதமே நடத்தி விடுவது என்று புரட்சித்தலைவரின் கழக அரசு முடிவு செய்துள்ளது.

இந்தத் தேர்தல்கள் ஏப்ரல் மாதம் 21, 23, 25, 28 ஆகிய நான்கு தேதிகளிலும் நான்கு கட்டங்களாக நடைபெறும் என்று தமிழக உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து அறிவித்துள்ளார்.

உள்ளாட்சி நிறுவனங்களுக்கான தேர்தல்கள் பற்றி அமைச்சர் காளிமுத்து அறிவித்துள்ள விவரங்கள் வருமாறு:-

சென்னை மாநகராட்சிக்கான வாக்காளர் பட்டியல் அச்சடிப்புப் பணிகள் இம்மாதம் (ஜனவரி) 10-ம் தேதி தொடங்கி பிப்ரவரி மாதம் 5ஆம் தேதி முடிவடையும்,

பிப்ரவரி மாதம் 6-ம் தேதி முதல் வாக்காளர் பட்டியல்வெளியீடப்படும். வாக்காளர்களின் இறுதிப் பட்டியல் மார்ச் மாதம் 2-ம் தேதி வெளியிடப்படும்.



### தேர்தல் அறிவிப்பு

தேர்தலின் முதற்பணியான தேர்தல் பற்றிய அறிவிப்பு மார்ச் மாதம் 5ம்தேதி வெளியிடப்படும்.

### வேட்புமனு

உள்ளாட்சி நிறுவனங்கள் அனைத்திற்குமான வேட்புமனுக்கள் மார்ச் மாதம் 12ம் தேதி பெற்றுக் கொள்ளப்படும்.

வேட்பாளர்களின் இறுதிப் பட்டியல் மார்ச் மாதம் 20 ஆம்தேதி வெளியிடப்படும்.

### வாக்குச் சீட்டுக்கள்

ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர்கள், நகராட்சித்தலைவர்கள் தேர்தலுக்கான வாக்குச்சீட்டுக்கள் அச்சடிப்புப் பணி மார்ச் மாதம் 21 ஆம் தேதி துவங்கி ஏப்ரல் மாதம் 20-ஆம் தேதி முடியும்.

### தேர்தல் தேதிகள்

தேர்தல்கள் நான்கு கட்டங்களாக நடைபெறும். ஏப்ரல் மாதம் 21,23,25,28 ஆகிய நான்குதேதிகளில் நான்கு கட்டங்களாக நடைபெறும்.

சென்னை மாநகராட்சித் தேர்தல் ஏப்ரல் 28 ஆம் தேதி நடைபெறும்.

### வாக்கு எண்ணிக்கை

ஏப்ரல் மாதம் 29ஆம் தேதி வாக்குகள் எண்ணப்பட்டு முடிவுகள் அறிவிக்கப்படும்.

இவ்வாறு உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து அறிவித்துள்ளார். உள்ளாட்சி நிறுவனங்...

(2-ம் பக்கம் பார்க்க)

## மத்தியில் நிலையான அரசு அமைவதை மக்கள் விரும்பி இருக்கிறார்கள்

# தேர்தல் முடிவு புரட்சித்தலைவருக்கு எதிரானது அல்ல

### நாஞ்சிலார் பேட்டி

சென்னை, ஜன. 8- நாடாளுமன்றத் தேர்தல் டெல்லி சம்பந்தப்பட்ட விவகாரம். மத்தியில் நிலையான அரசு அமைவதை மக்கள் விரும்பியுள்ளனர். தேர்தல் முடிவு புரட்சித்தலைவருக்கு எதிரானது அல்ல என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.

தேர்தல் முடிவு குறித்து நிதிஅமைச்சர் நாஞ்சிலார் கூறியதாவது:

நடந்து முடிந்த தேர்தலில் மத்திய அரசு பொறுப்பு யாருக்கு என்பதையே மக்கள்பிரதானமாகக் கவனித்துள்ளனர்.

தேர்தல் முடிவானது புரட்சித் தலைவருக்கோ, அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்துக்கோ எதிரானது அல்ல.



நடந்த தேர்தலில் மத்தியில் யார் ஆட்சிசெய்வதுஎன்றபிரச்சினையையே மக்கள் கவனித்துள்ளனர்.

**பாண்டிச்சேரி**

பாண்டிச்சேரி இணைப்பு பிரச்சினை, மதுவிலக்குப் பிரச்சினை ஆகியவற்றை தி. மு. க.வும், இ. காங்கிரசும்நன்றாகப்பயன்படுத்திக்கொண்டன. இந்த பிரச்சினைகளில் மொரார்ஜி தேசாய் கருத்தை கழகம் ஏற்கவில்லை என்ற அறிவிப்பை, தி. மு. க., இ. காங்கிரசார் மறைத்து விட்டார்கள்.

நடந்த தேர்தல் நாடாளு மன்றத்துக்கானது. இதை வைத்து இங்கே ஆட்சிப்பொறுப்பிலிருந்து கழகம் இறங்க வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் வாதிட்டால் அது சரியானது ஆகாது.

எம். பி. தேர்தல் முடிவை வைத்துக் கொண்டு இங்கு கட்சி மாறல் இருக்கும் என்று யாராவது எதிர்பார்த்தால் ஏமாந்து போவார்கள். கழக எம். எல். ஏ.க்கள் கொள்கைக் குன்றுகள். சபலத்துக்கு ஆளானவர்களல்ல. எதிர்க்கட்சிகளின் பொய்ப் பிரச்சாரத்துக்கு அவர்கள் பலி ஆக மாட்டார்கள்.

எங்களைப் பற்றி யார் என்ன புகார் கூறினாலும் கவலை இல்லை. எந்த விசாரணையையும் நாங்கள் எதிர்நோக்கத் தயார். எங்கள் மடியில் கனமில்லை. வழியில் பயமில்லை.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்துக்கும் தி. மு. க.வுக்கும் ஓட்டு வித்தியாசம் அதிகம் இல்லை. கழகத்துக்கும் இ. காங்கிரசுக்கும் ஓட்டு வித்தியாசம் சற்று கூடுதல்.

எனவே நாடாளுமன்றத்துக்கு நடந்த தேர்தலில் மத்தியில் நிலையான அரசு அமைய வேண்டும் என்று மக்கள் விரும்பி இருக்கிறார்கள் என்பது புலனாகிறது.

**வரவேற்பு**

ஜனநாயகத் தத்துவத்தை ஏற்பவர்கள்என்ற முறையில் மக்கள் தீர்ப்பின்படி மத்தியில் அமையும் புதிய அரசை வரவேற்கிறோம்.

இவ்வாறு நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.

## கருநாடகத்தில் புதுமந்திரிசபை அமைக்க குண்டுராவுக்கு அழைப்பு

சென்னை, ஜன. 8. கருநாடகத்தில் தேவராஜ் அர்ஸ் மந்திரிசபை பதவி விலகியது அல்லவா? எனவே புதிய மந்திரி சபை அமைப்பதற்கான சாத்தியங்களைக் கண்டறிய எதிர்க்கட்சி (இ. காங்கிரஸ்) தலைவர் ஆர். குண்டுராவை கருநாடக ஆளுநர் கோவிந்த நாராயணன் அழைத்துள்ளார்.

## கழகச் சட்டமன்ற உறுப்பினர்கள் அவசரக் கூட்டம்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகச் சட்டமன்ற உறுப்பினர்களின் அவசரக் கூட்டம் 10-1-80 (வியாழக்கிழமை) காலை சென்னையில் நடைபெறுகிறது.

கழகச்சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் கூட்டத்தில் தவறாது கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

-துரை. கோவிந்தராஜன்,
தலைமைக் கொறடா

சென்னை
8-1-1980

## புரட்சித்தலைவருடன் பேசிவிட்டுஅர்ஸ்விலகலா செய்திக்கு மறுப்பு

சென்னை, ஜன. 8-முதல்வர் புரட்சித்தலைவருடன் பேசியபின் தேவராஜ் அர்ஸ் தமது முதல்வர் பதவியை ராஜினாமா செய்தார் என்று "உதயமுரசு" நாளிதழ் வெளியிட்ட செய்தி தவறானது.

சென்னையில் முதல்வர் புரட்சித்தலைவருடன் தேவராஜ்அர்ஸ், பேராசிரியர் பா. ராமச்சந்திரன் ஆகியோர் பேச்சு நடத்தியதாகவும் பின்னர் பெங்களூர் சென்றதும் தேவராஜ்அர்ஸ் தமது முதல்வர் பதவியை ராஜினாமா செய்தார் என்றும் 'உதயமுரசு' நாளிதழ் இன்று செய்தி வெளியிட்டுள்ளது.

கூட்டாக அவர்கள் ஆலோசனை நடத்தியதாக வந்த அந்த செய்தி தவறானதாகும்.

முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்த பின்னரே அர்ஸ் ராஜினாமா செய்தார் என்ற தகவலும் தவறு.

# தமிழகபுதியஎம்.பி.கள்

## கழகம்

1. கோபி சின்னசாமி
2. சிவகாசி நல்லவன் என்கிற சவுந்தரராசன்

## இந்திரா காங்கிரஸ்

1. அரக்கோணம் ஏ எம் வேலு
2. திண்டிவனம். எஸ். எஸ் ராமசாமி படையாச்சி
3. கடலூர். ஆர். முத்துக்குமரன்
4. ராசிபுரம். பி. தேவராஜன்
5. திருச்செந்தூர். கே டி. கோசல்ராம்
6. பழனி- சேனபதி கவுண்டர்
7. பெரம்பலூர்- கே. பி. எஸ் மணி
8. தஞ்சை. எஸ். சிங்காரவடிவேலு
9. சிவகங்கை- ஆர். வி. சாமிநாதன்
10. தென்காசி- எம். அருணாசலம்
11. நீலகிரி- பிரபு
12. கிருஷ்ணகிரி- கே ராமமூர்த்தி
13. கரூர். துரை. செபஸ்தியான்
14. புதுக்கோட்டை வி என் சாமிநாதன்
15. செங்கற்பட்டு- அன்பரசு
16. தென்சென்னை- ஆர். வெங்கட்ராமன்
17. நாகர்கோயில் டென்னீஸ்
18. மதுரை - ஏ. ஜி. சுப்பராமன்
19. வந்தவாசி- பட்டுசாமி
20. மாயவரம்- குடந்தை ராமலிங்கம்

## தி. மு க

1. ஸ்ரீபெரும்புதூர் டி நாகரத்தினம்
2. திருப்பத்தூர். எஸ் முருகையன்
3. திருச்செங்கோடு. எம் கந்தசாமி
4. பெரியகுளம்- கம்பம் நடராஜன்
5. நாகப்பட்டினம்- தாழை மு கருணாநிதி
6. ராமநாதபுரம்- எம். எஸ். கே. சத்தியேந்திரன்
7. வடசென்னை- ஜி. லட்சுமணன்
8. மத்தியசென்னை- டாக்டர் கலாநிதி
9. சிதம்பரம்- டாக்டர் குழந்தைவேலு
10. திருச்சி- செல்வராஜ்
11. சேலம்- பழனியப்பன்
12. தருமபுரி- அர்ச்சுனன்
13. கோவை- இரா. மோகன்
14. திண்டுக்கல்- மாயத்தேவர்
15. திருநெல்வேலி- டி ஏ எஸ் சிவப்பிரகாசம்
16. பொள்ளாச்சி- சி டி. தண்டபாணி

## முஸ்லிம்லீக்

1. வேலூர் ஏ கே ஏ அப்துல்சமது

---

தமிழ் நாடு

## பரிசுச்சீட்டு குலுக்கல் முடிவுகள்

சென்னை, ஜன, 8- தமிழ்நாடு பரிசுச்சீட்டுக் குலுக்கல் இன்று காலை 10 மணிக்கு சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்றது.

இந்த குலுக்கலில் இ.எச், இ.ஐ, இ.ஜே ஆகிய மூன்று வரிசைகள் குலுக்கப்பட்டன.

சென்னை, சிதம்பரம், சேலம், பழனி ஆகிய ஊர்களுக்குதலா ரூ.50ஆயிரம் முதல் பரிசு கிடைத்துள்ளன.

### இ எச். வரிசை

முதல் பரிசு ரூ. 50,000
தலா இரண்டு பேருக்கு
548619 (சென்னை)
111603 (சிதம்பரம்)
இரண்டாவது பரிசு ரூ. 10,000
தலா 3 பேருக்கு
366198(ஸ்ரீவில்லிபுத்தூர்)
775614(உத்தமபாளையம்)
864242 (பழனி)
3-வது பரிசு ரூ5,000
தலா 5 பேருக்கு
749887
771539
590660
478921
543254

### இ. ஐ. வரிசை

முதல் பரிசு ரூ 50,000
தலா இரண்டு பரிசுகள்
921006 (சேலம்)
335511 (பழனி)
2-வது பரிசு ரூ 10,000
தலா 3 பேருக்கு
947491
268209
683364
3-வது பரிசு ரூ 5,000
தலா 5 பேருக்கு
779898
293500
058620
689582
975999

### இ. ஜே வரிசை

முதல் பரிசு ரூ, 50,000
தலா இரண்டு பேருக்கு
274597
207650
2-வது ரூ. 10,000
தலா 3 பேருக்கு
933824
083121
153141
3-வது பரிசு ரூ. 5000
தலா 5 பேருக்கு
683566
512802
425631
779481
788427

---

பனமரத்துப்பட்டி எம்.எல்.ஏ. தொகுதி

# கழக வேட்பாளர் ராசாராம் வெற்றி

## விளவங்கோட்டில் மார்க்சிஸ்ட் தேர்வு

சென்னை, ஜன. 8-பனமரத்துப்பட்டி சட்டமன்றத் தொகுதியில் போட்டியிட்ட கழக வேட்பாளர் க. ராசாராம் வெற்றிபெற்றார். விளவங்கோடு சட்டமன்றத் தொகுதியில் போட்டியிட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு வேட்பாளர் பாக்கியதாஸ் வெற்றி பெற்றார்.

பனமரத்துப்பட்டி சட்டமன்றதொகுதியில்போட்டியிட்ட கழக வேட்பாளர் க. ராசாராம் வெற்றி பெற்றார். தன்னைஎதிர்த்து போட்டியிட்ட தி மு க வேட்பாளர் டி. பொன்னுமலையைவிட 187 வாக்குகள் அதிகம்பெற்று க. ராசாராம் வெற்றிபெற்றார்.

கழக வேட்பாளர் க. ராசாராம் பெற்றவாக்குகள் 29 ஆயிரத்து 618 ஆகும். தி. மு. க. வேட்பாளர் டி. பொன்னுமலை பெற்ற வாக்குகள் 29 ஆயிரதது 431 ஆகும்.

விளவங்காடு சட்டமன்றத்தொகுதிக்கு போட்டியிட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் வேட்பாளர் பாக்கிய தாஸ் வெற்றி பெற்றார். தன்னை எதிர்த்து போட்டியிட்ட ஜனதா வேட்பாளர் எஸ். சத்திய தாசைவிட 7 ஆயிரத்து 935 வாக்குகள் அதிகம் பெற்று பாக்கிய தாஸ் வெற்றி பெற்றார்.

மார்க்சிஸ்ட் வேட்பாளர் பாக்கியதாஸ் பெற்ற வாக்குகள் எண்ணிக்கை 26 ஆயிரத்து 408. ஜனதா வேட்பாளர் எஸ், சத்திய தாஸ் பெற்ற வாக்குகள் 18 ஆயிரத்து 473 ஆகும்.

### ஓட்டு விவரம்: பனமரத்துப் பட்டி

க. ராசாராம் (கழகம்) 29, 618
டி. பொன்னுமலை (திமுக) 29,431
பி. பாலசுப்பிரமணியம் (லோக் தளம்) 3, 482
பி. கந்தசாமி (சுயச்சை 3, 136
எஸ். ஐ.ராஜகுமார் 1,482
கே. குமாரசாமி 347
கே. முனுசாமி 247



எம. கண்ணசதாசன் 198
ஏ. எஸ். வரதராஜன் 102
செல்லாதவை 3,619.
(சுயேச்சை வேட்பாளர்கள் டெபாசிட் இழந்தனர்).

---

# தேர்தல் முடிவு விவரம்

| | |
|---|---|
| மொத்த இடங்கள்: | 542 |
| முடிவு தெரிந்தவை: | 407 |
| இ காங்கிரஸ்: | 305 |
| ஜனதா: | 23 |
| லோகதளம்: | 30 |
| அர்ஸ் காங்கிரஸ்: | 8 |
| இந்திய கம்யூனிஸ்டு: | 4 |
| மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு: | 6 |
| தி. மு. க: | 16 |
| அனைத்திந்திய அண்ணா தி மு க: | 2 |
| சுயேச்சை: | 2 |
| இதர கட்சிகள்: | 11 |

---

## தி.மு.க. ஆட்டத்தால் வீடுகள்சாம்பல்

சென்னை, ஜன 8- சென்னை ராயபுரம் தொகுதியில் தி மு கவினர் நாடாளுமன்ற தேர்தல் வெற்றியொட்டி பட்டாசுகள் வெடித்து விழா நடத்தினர்,

இன்று காலை ராயபுரம் ராபர்ட்சன் காலனியில் தி.மு.கவினர் பட்டாசு வெடித்துக் கொண்டாடினர். அப்போது ஒரு பட்டாசு அருகிலுள்ள குடிசை மீதுவிழுந்து அந்த குடிசை தீப்பிடித்துக் கொண்டது.

உடனே தியணைப்புப் படையினர் அந்த இடத்திற்கு விரைந்து சென்று மேலும் தீ பரவாமல் தடுத்தனர் இதனால் அப்பகுதியில் ஒரு குடிசை மட்டும் எரிந்து ரூ 300 மதிப்புள்ள பொருட்கள் நாசமாயின.

## ஏலமாற்றம்

1) ஏ. சுரேஷ் & கோ, 78, ஆற்காட் ரோட், சென்னை 24. 2) M. P. போரா, 294, ஆற்காட் ரோட், சென்னை 24. 3) ஆர். மதன்லால், 339-12 டி. எச். ரோட், சென்னை-5 4) கட்டாரியா அண்டு கோ, 212, டி. எச். ரோட், சென்னை-5 5) எச். பாபுலால் ஜெயின், 386, டி. எச். ரோட், சென்னை-5 6) எஸ். மோஹன்லால் ஜெயின், 35 இருசப்ப கிராமணி தெரு, சென்னை-5 7) எம். பர்தாப்மல் ஜெயின் 39, குப்புமுத்து முதலி தெரு, சென்னை-5 8) எம். நேமிசந்த் ஜெயின், 12, ஜானிபாஷாசாயுபுதெரு சென்னை-14. மேற்படியாளர்கள் ஏலம் தேதி 5-1-80 அன்று நிறுத்தப்பட்ட ஏலத்தை தேதி 9-1-80 அன்று காலை 11 மணிக்கு மேல் வரிசையாக ஏலம் 64, எல்லீஸ் ரோடு சென்னை-2ல் ஏ. கிரிதாரிலால் அவர்கள் வருவாய்த் துறை அதிகாரிகள்முன்னிலையில் ஏலம் போடுவார் என்பதை இதன்வாயிலாக அடகு வைத்தவர்களுக்கும் பொது மக்களுக்கும் தெரிவிக்கப்படுகிறது.

---

# தமிழ் நாட்டு நிலவரம்

| | | |
|---|---|---|
| மொத்த இடங்கள் | : | 39 |
| முடிவு தெரிந்தவை | : | 39 |
| இ காங்கிரஸ் | : | 20 |
| கழகம் | : | 2 |
| முஸ்லிம் லீக் | : | 1 |
| தி. மு. க. | : | 16 |

---

இதுவரை பெற்றிராத வாக்கு வித்தியாசத்தில்

## இந்திரா காந்தி வெற்றி

புதுடெல்லி, ஜன 8- ஆந்திர மாநிலத்தில்உள்ள மேடக் தொகுதியிலிருந்து நாடாளு மன்றத்துக்கு போட்டியிட்ட இந்திரா காந்தி இரண்டு லட்சம் வாக்குகள் அதிகம்பெற்று அமோக வெற்றிபெற்றுள்ளார்.

1966-ம் ஆண்டு பிரதமராகத்தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திராகாந்தி இதுவரை 5 நாடாளுமன்றத தேர்தலில் போட்டியிட்டார்.

மேடக் தொகுதியில் பெற்ற அதிக அளவு வாக்குவித்தியாசம் இதுவரை அவர் பெறவில்லை. மேடக் தொகுதியில் இப்போது அவர் பெற்ற வாக்குகள் வித்தியாசம் தான் பெரிய வித்தியாசம் ஆகும்.

1967-ம் ஆண்டு நடந்த நாடாளுமன்றத் தேர்தலின் போது முதல் முறையாக அவர் எம்- பி தேர்தலுக்கு ரேபரேலி தொகுதியில் போட்டியிட்டார். அப்போது தன்னை எதிர்த்து போட்டியிட்ட சுயச்சை வேட்பாளர் பி. சி. சேத்தை விட91 ஆயிரத்து 703 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றார். மொத்தம் 55. 19 சதவிகித வாச்குகள் அவருக்கு அப்போது கிடைத்தன.

## ஜனதா செயற்குழு

சென்னை, ஜன. 8 தமிழக ஜனதா கட்சியின் செயற்குழுக் கூட்டம் இம் மாதம் 12-ந் தேதி (சனி) பகல் 11 மணிக்கு சென்னை சத்தியமூர்த்தி பவனில் கூடுகிறது.

## காளிமுத்து அறிவிப்பு

(முதல் பக்கத் தொடர்ச்சி)

களுக்கு தமிழகத்தில்1970 ஆம ஆண்டு ஜூலை மாதம் தேர்தல் நடைபெற்றது கருணாநிதி ஆட்சிக் காலத்தில் பலமுறை ஒத்திவைக்கப்பட்ட உள்ளாட்சித் தேர்தல்களை உடனடியாக நடத்திவிட புரட்சித்தலைவரின் கழக அரசு முடிவு செய்து தேதிகளை அறிவித்துள்ளது.

---



---

# என்ன காரணம்?

(ஏ. என். சிவராமன்)

'வைரம்விலை ஏறினதால் மக்கள் துயரத்திற்கு உள்ளாகிறார்கள்' என்று இந்த நாட்டில் சொன்னால் 'ஏறினால் ஏறட்டும் ஐயா, சாதாரண மக்கள் அதைப் பற்றியா கவலைப்பட்டார்கள்?' என்றுதான் எவனும் கூறுவான்.

ஆனால் தங்கம் விலை ஏறியது என்று கூறினால் ஐரோப்பாவில் கவலைப்படுவோர் குறைவு: இந்தியாவில் அப்படியல்ல, பரம ஏழை கூட ஐயய்யோ என்று கூறுவான்

அது இந்த நாட்டின் தனிச்சிறப்பு. எவ்வளவு ஏழையாக இருந்தாலும் பெண் கழுத்தில், காதில் ஒரு குண்டுமணி தங்கமாவது இருக்க வேண்டும் என்று நினைக்கிறான்.

இந்த மனபான்மை மாறுவிடில் தங்கம் விலை குறைவதற்கு என்ன வழி என்று எல்லோரும் கவலைப்பட வேண்டியது அவசியம்.

இந்த நாட்டில் அரசியல் வாதிகள் வாக்காளர்களைப் பற்றி என்ன அபிப்பிராயம் வைத்திருக்கிறார்கள் என்பதை இது போன்ற விளம்பரங்கள் காட்டுகின்றன.

இது ஒரு புறமிருக்க படித்த வகுப்பினரை எடுத்துக் கொள்வோம்.

'வெங்காயம் விலை ரூ 2 என்று விற்கிறது. ஓட்டு என்ன ஓட்டு! நான் ஆளும் கட்சிக்குஓட்டு போடமாட்டேன்' என்கிறார் ஒரு எம் ஏ. படித்த ஆசிரியர்.

'நானும்அப்படித்தான். எதிர் கட்சிக்குத்தான் ஓட்டுப்போட வேண்டும் என் கிறார்மற்றொருபட்டதாரி.

இவர்கள் இருவரும் வேளாண்மை பற்றிமாணவருக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கத்தகுதி உள்ளவர்கள்.

அதிகமான மழை பெய்து வயலில் தண்ணீர் தேங்கினால் வெங்காயப் பயிர் அழுகிப்போகும் என்பதும், அண்மையில் கொடு மழை பெய்தது என்பதும் அவர்களுக்குத் தெரியும். ஆனால் வெங்காய விலை உயர்விற்கு ஆளும் கட்சிதான் காரணம் என்று அவர்கள் உண்மையிலேயே நம்புகிறார்கள் போலும்.

தமாஷ் ஒரு பக்கம் இருக்க படித்த ஒட்டர்கள் கூட எப்படி ஓட்டுச் செய்கிறார்கள். என்பதை இதிலிருந்து ஊகிக்கலாம்.

விலைவாசிகள் உயர்ந்தால்மக்களிடையேகஷ்டம் அதிகரித்தால் அது ஆளும் கட்சிக்குப் பாதகம் அதாவது எதிர்கட்சிக்கு சாதகம்-எதிர்க்கட்சி அரசியல்வாதிகளுக்கு அதி நஷ்டம்.

இவ்வாறு கவனிக்குமிடத்து தேர்தல் வெற்றிக்காக 'பதவிக் கட்சியின் காலத்தில் துயரம்அதிகரிக்க தம்மால் இயன்றதை செய்து பார்ப்போம்'' என்றமனப்பான்மை கூட எதிர்க்கட்சி அரசியல் வாதிகளிடம் இருக்கக்கூடும்

சட்டம், அமைதி சீர் குலைவதற்குத் தம்மால் இயன்றதை எல்லாம் செய்து விட்டு இந்த ஆட்சியில் சட்டம், அமைதி ஒழிந்துவிட்டது. அமைதி வேண்டுமா? எனக்கு ஓட்டளியுங்கள்என்று சொல்லுவதை எதிர்க்கட்சிகள் தம் 'கட்சிப் பணியாக'க் கொண்டாலும் இந்த நாட்டில் ஆச்சரியப்படுவதற்கில்லை.

தேர்தல்பிரசார பிரசுரங்களில் '' உண்மைக்கு முக்கியத்துவம் இருப்பதில்லை. உதாரணமாக சென்ற வாரம் ஒரு பிரசுரத்தைப் பார்த்தேன். அன்றாட உபயோகத்திற்கான பல பொருள்கள் 1976ல். இருந்த விலையையும் 1979 இறுதியில் இருந்த விலையையும் ஒப்பிட்டுப் புள்ளி விவரங்கள் தரப்பட்டிருந்தன. அதில் எண்ணெய் விலை இரட்டித்திருப்பது போல காட்டப்பட்டிருந்தது.

1976-ல் கடலை எண்ணெய் விலை கிலோ ரூ. 4.75 என்று இருந்ததாகவும் இப்போது விலை ரூ 10-60 என்றும் போட்டிருந்தது. இப்படி பல பொருள்களின் ஒப்பு நோக்கு விலை பட்டியல் அதில் தரப்பட்டிருந்தது. ஆகையால்

பதவியில் உள்ள கட்சிக்கு ஓட்டளிக்காதீர்கள் என்று கூறுவதுதான் அதன் நோக்கம்.

ஆகையால் பழைய பத்திரிகைகளை புரட்டிப் பார்த்தேன். மார்க்கெட் செய்திகள் என்ற பகுதியில் கடலை எண்ணெ 30 12 76ல் கிலோ ரூ8-50 29 12-79ல் கிலோ ரூ 9-50 தேங்காய் எண்ணெ 30-12 76ல் கிலோ ரூ17,00 29 12 79ல்கிலோரூ17.00

ஆளும் கட்சிக்கோ, அதன் அணிக்கோ ஓட்டுப் போடலாகாது என்பதற்கு காரணம் கூறும் அந்த பிரசுரத்தில் 1972ல் கடலை எண்ணெ ரூ 8.50 என்பதற்குப் பதிலாக ரூ.4.75 என்றும் தேங்காய்எண்ணெ ரூ. 17.00 என்பதற்கு பதில் ரூ. 9 50 என்றும் போட்டிருந்தது.

இந்த புள்ளிவிவரங்களை அச்சில் படித்தவர்கள் ஒரு லட்சம் இருப்பதாக வைத்துக்கொள்வோம். 1976 பற்றி பிரசுரமான இந்த உண்மை 40 லட்சம் பேருக்காவது சொற்பொழிவுமேடைகளிலிருந்து அறிவிக்கப்பட்டிருக்கும். இது எல்லா நாடுகளிலும் உண்டு.

மொத்தத்தில்மக்களுக்கு பல கஷ்டங்கள் இருக்கின்றனஎன்பது உண்மை. முன்னர் பட்ட கஷ்டம் இப்பொழுது மறந்து போயிருக்கும். இப்போது அனுபவிப்பது தான் மனதை அழுத்தும்.

''நாம் கஷ்டப்படுகிறோம். கஷ்டம் அதிகரித்து வருகிறது'' என்ற உணர்ச்சி மக்களிடம் இருக்கும் போது எதிர்க் கட்சிகளுக்கு அது ஒரு வாய்ப்பு.

ஆகையால் இந்திரா காங்கிரசும், ஜனதாவுக்கு எதிரிகளான கட்சிகளும், இப்போதைய தேர்தலில் முன்னைவிட சிறிது அதிகமான இடங்களை பெறுவார்களானல் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை (இந்த வசனமும், இந்த முழுக்கட்டுரையும் 5-ந் தேதி இரவே அதாவது தேர்தல் முடிவுகள் வெளியாவதற்கு முன்னமேயே எழுதப்பட்டது என்பதை நினைவில் வைத்து படிக்கவும்.]

ஹிந்து தலையங்கத்தில் இன்னாருக்கு ஒட்டளியுங்கள் என்று சொல்லாமல் இந்திரா காங்கிரசை (எதேச்சரதிகார முகாமை) நாடு முழுவதிலும் பூர்ணமாகதோற்கடிப்பது அவசியம் என்று கூறுவதோடு நிறுத்திக்கொண்டது இதை எனக்கு நினைவூட்டுகிறது.

சாதாரணமாக நான் எந்தக் கட்சி பதவிக்கு வந்தாலும் அதுபற்றி அதிகமாகக் கவலைப்படுவதில்லை.

மக்களிடையே உழைப்பு மனப்பான்மையும், தேசப் பற்றும், வர்த்தக நேர்மையும், நல்ல நிலையில் இல்லாத வரையில் எந்த கட்சி வந்தாலும் நாட்டை முன்னேற்றிவிட முடியாது என்பது என் கருத்து.

எந்தக் கட்சி வந்தாலும் பிரமாதமான தீமை ஏற்பட்டு விடாது என்ற நிலைமை உருவாகுமானல் அத்துடன் திருப்தி அடைபவன் நான்.

நான் ஆசைப்படுவது ஒன்றே ஒன்றுதான்.

நடக்கின்ற ஆட்சியானது சட்டப்படியுள்ள ஆட்சியாக நடக்க வேண்டும். நீதிமன்றங்களுக்கும் பிரஜா உரிமைகளுக்கும், முக்கியத்துவமும் கௌரவமும் இருக்க வேண்டும்.

சட்டத்தின் ஆட்சி 'Rule of Law' இருக்க வேண்டும்.

(தினமணியில் ஏ.என்.எஸ் எழுதியகட்டுரையிலிருந்து)

# கமலபதிதிரிபாதி வெற்றி
# ராஜ்நாராயண் படுதோல்வி
## முக்கிய தலைவர்கள் வெற்றி-தோல்வி விவரம்

புதுடெல்லி, ஜன. 8- ராஜ்நாராயணன் இந்தத் தேர்தலில் தோல்வியடைந்தார். அவரை எதிர்த்துப் போட்டியிட்ட கமலபதி திரிபாதி வெற்றியடைந்தார். அசோக்மேத்தா, ஹென்றி ஆஸ்டின் தோல்வி அடைந்தனர்.

கடந்த தேர்தலில் ரேபரேலி தொகுதியில் ராஜ்நாராயணன் போட்டியிட்டு இந்திரா காந்தியை தோற்கடித்தார். அப்போது இந்திராவை விட 50 ஆயிரம் ஓட்டுக்கள் அதிகம் பெற்றிருந்தார். இந்த தேர்தலில் ரேபரேலியில் இருந்து வாரணாசிக்கு மாறினார். வாரணாசியில் அவரை எதிர்த்து உத்தரப் பிரதேச இ-காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான கமலபதி திரிபாதி போட்டியிட்டார்.

வாரணாசியில் நேற்று ஓட்டு எண்ணிக்கை தொடங்கியதும் கமலபதி திரிபாதி முன்னணியில் இருந்தார்.

இறுதியில் கமலபதிதிரிபாதி வெற்றி பெற்றார்.

கமலபதிதிரிபாதி இப்போது டெல்லி மேல்சபை உறுப்பினராக இருக்கிறார். லோகசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதால் மேல்சபை உறுப்பினர் பதவியை ராஜினாமாச் செய்தார்.

### ஹென்றி ஆஸ்டின் தோல்வி

மத்திய அமைச்சர் ஹென்றிஆஸ்டின்தோல்வியடைந்தார். இவர்சரண்சிங் அமைச்சரவையில் சிவில் சப்ளை இலாகாவில் ராஜாங்க அமைச்சராக இருந்தவர்.

எர்ணாகுளம் தொகுதியில் போட்டியிட்ட அவருக்கும் இ. காங்கிரஸ் வேட்பாளர் சேவியர் அரக்கல்லுக்கும் ஏற்பட்ட போட்டியில் ஹென்றி ஆஸ்டின் தோல்வியடைந்தார்.

ஆலப்புழை தொகுதியில் இ. காங்கிரஸ் வேட்பாளர் ஏ. கே. கோபாலன் மனைவி சுசிலாகோபாலன் வெற்றிபெற்றார்.

ஆந்திர மாநிலத்தில் நரசராவ் பேட்டில் இ. காங்கிரஸ் சார்பில் போட்டியிட்ட பிரும்மானந்தரெட்டி வெற்றி பெற்றார்.

### பிலுமோடி தோல்வி

குஜராத் மாநிலத்தில் கோத்ரா தொகுதியில் ஜனதா கட்சி சார்பில் பிலுமோடி போட்டியிட்டார். அத்தொகுதியில் காங்கிரஸ் இ. வேட்பாளர் வெற்றி பெற்றார்.

### பட்நாய்க் வெற்றி

ஒரிசா மாநிலத்தில் கேந்திரபாரா தொகுதியில் மக்கள் கட்சி சார்பில் மத்திய அமைச்சர் பட்நாயக் வெற்றி பெற்றார். அவரை எதிர்த்து

(7-ம் பக்கம் பார்க்க)



### சரண்சிங் ஓட்டு விவரம்

உத்தரப் பிரதேசத்தில் பக்பத் தொகுதியில் சரண்சிங் வெற்றி பெற்றார். ஓட்டு விவரம் வருமாறு:

| | |
|---|---|
| மொத்தஓட்டுகள் | 712650 |
| பதிவானவை | 501192 |
| செல்லாதவை | 5825 |
| சரண்சிங் (லோகதளம்) | 323077 |
| ஆர். சி. விகல் (இ.காங்கிரஸ்) | 157956 |
| தாராசிங் (ஜனதா) | 3743 |
| ரமேஷ் (சுயே) | 2746 |
| தரம்பால் ஜாதவ் | 2310 |
| வான்ஷ் கோபால் | 1814 |
| சங்காசார்யா | 1440 |
| சிரோமணி | 691 |
| தர்த்திபாகர் | 680 |
| எஸ். ஆர். சிங் | 597 |
| நூருதீன் | 313 |



### பெரம்பூரில் கருணாநிதி கட்சிரவுடிபடை வன்முறை வெறியாட்டம்

சென்னை, ஜன. 8- பெரம்பூரில் கருணாநிதி கட்சி ரவுடிப் படை காலிகள் வன்முறை வெறியாட்டம் நடத்தினர்.

சென்னை 26-வது வட்டம் பெரம்பூர் பஸ்நிலையத்தின் அருகில் உள்ள கழகக் கொடிக் கம்பத்தை கருணாநிதி கட்சி காலிகள் தாக்கி நாசப்படுத்தினர்.

26-வது வட்டத்தில் உள்ள வடிவேலு முதலித் தெரு, மதுரை முதலித் தெரு (ஜங்ஷன்) வில் உள்ள கழகக் கொடி கம்பங்களை உடைத்தும் கழகக் கொடிகளை கிழித்தும் வன்முறை வெறியாட்டம் செய்தனர்.

பாரதி சாலையிலிருந்த கழகத் தேர்தல் அலுவலகத்தில் கருணாநிதிக் கட்சி வன்முறை கும்பல் புகுந்தது. பேரறிஞர் அண்ணாவின் படத்தை உடைத்தெறிந்தனர். கழக பேனர்களை கிழித்து நாசப்படுத்தினர்.

தி. மு. க. காலிகள் இரவு நேரங்களில் கழகத் தொண்டர்களின் இல்லங்களில் புகுந்து கழகத் தோழர்களை கொலை செய்வதாக மிரட்டி வருகின்றனர்.

# மக்கள் தீர்ப்பை மனநிறைவுடன் ஏற்கிறேன்

### பா. ராமச்சந்திரன் அறிக்கை

சென்னை, ஜன. 8- மக்கள் தீர்ப்பை மனநிறைவுடன் ஏற்றுக்கொள்கிறேன் என்று பேராசிரியர் பா. ராமச்சந்திரன் குறிப்பிட்டுள்ளார்.

தேர்தல் முடிவுகளையொட்டி பேராசிரியர் பா. ரா. வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:

மக்களாட்சியில் வெற்றி தோல்வி என்பது சர்வ சாதாரணமான நிகழ்ச்சிகளாகும்.

ஆகவே தோல்வியைக் கண்டு சஞ்சலமடையாமல் மக்களின் தீர்ப்பை மன நிறைவுடன் ஏற்றுக் கொள்கிறேன்.

இந்த தேர்தல் சில முக்கியமான படிப்பினைகளை உணர்த்தியிருக்கின்றது. அவற்றை கவனத்தில் கொண்டு செயல்படுவதன் மூலம் மீண்டும் மக்களின் ஆதரவைப் பெறுவோம் என திடமாக நம்புகின்றேன்.

தேர்தலுக்காக இரவு பகலென்று பாராமல், சொந்த நலன்களைக்கூடகவனியாது உழைத்திட்ட ஜனதா, அனைத்திந்திய அண்ணா தி. மு. க. இந்தியக் கம்யூனிஸ்ட், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மற்றும் தோழமை கட்சிகளைச் சார்ந்த செயல் வீரர்கள் அனைவருக்கும் மிக்க பணிவுடன் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்

எனக்காக விசேஷ சிரத்தை எடுத்துக் கொண்ட தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர் அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றேன்.

இந்ததேர்தலில் எனக்கும் மற்றும் ஜனநாயக முற்போக்குக் கூட்டணியின் வேட்பாளர்களுக்கும் வாக்களித்த தமிழக மக்களுக்கு குறிப்பாக மத்திய சென்னை வாக்காளர்களுக்குமிக்கபணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு பா. ரா. கூறியுள்ளார்,



### எஸ்.வி.எல்.

தமிழ்நாடு ஜனதா தலைவர் எஸ். வி. லட்சுமணன் அறிக்கை வருமாறு:

நடந்து முடிந்தநாடாளு மன்ற தேர்தலில் பண பலம், மலிவான வாக்குறுதி, பொய்ப்பிரச்சாரம் ஆகியவற்றை எதிர்த்தும், பலவிதமான இன்னல்களை ஏற்றும், தம்மைச்சார்ந்தோரின் இன்னுயிர்களை இழந்தும், தன்னலம் கருதாது, ஜனதா, அனைத்திந்திய அண்ணா தி. மு. க, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளர்களுக்கு வாக்களித்த வாக்காளப் பெருமக்களுக்கு என் உள்ளபூர்வமான நன்றியினை தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும், கூட்டணி கட்சிகளுக்கு வாக்குகள் சேகரித்த கட்சி நண்பர்களை நான் மறக்க இயலாது. பண ஆசை, பதவி ஆசை என்கின்ற பேராசையினால், பகட்டான பொய்ப் பிரச்சாரங்களை முடுக்கிவிட்டு, எண்ணற்ற தொல்லைகள் தந்திட்ட ஜனநாயக விரோதிகளை முறியடிக்க ஊண் உறக்கமின்றி பாடுபட்ட கூட்டணி கட்சிகளின் தொண்டர்களை பாராட்டி என் உளங்கனிந்த நன்றியினை தெரிவித்துக்கொள்கிறேன்.

ஜனநாயகநாட்டில்தேர்தல் வெற்றி தோல்விகள் என்பது சாதாரணநிகழ்ச்சிகளாகும். தேசத்தந்தை மகாத்மா காந்தியடிகளின் கொள்கை வழி பிறழாது நடந்து வருபவர்கள் நாம். பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் கொள்கைகளையும் லட்சியங்களையும் மனதிலே ஏற்றுக்கொண்டவர்கள் நாம், அவைகள் நிறைவேறும் வரை அயராது பணியாற்றிட வேண்டுகிறேன்.

தருமத்தின் வாழ்வுதனை சூது கவ்வும் இறுதியில் தருமமே வெல்லும்.

இவ்வாறு எஸ். வி. லட்சுமணன் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

## பாண்டிச்சேரி முதல்வர் யார்?
# இ.காங்கிரஸ் தி.மு.க. கடும் போட்டி

புதுவை, ஜன. 8 புதுவையில் வெற்றி பெற்ற இ. காங்கிரஸ் - தி.மு.க. கூட்டணியில் முதல் அமைச்சர் பதவி யாருக்கு என்ற போட்டி இப்போது ஆரம்பித்துள்ளது.

நடந்து முடிந்த தேர்தல்களில் புதுவையில் இ. காங்கிரஸ் தி. மு. க. கூட்டணி அதிக இடங்களை பிடித்து ஆட்சியை கைப்பற்றியுள்ளது. இந்நிலையில் முதல் அமைச்சர் பதவி யாருக்கு என்ற போட்டி அந்த இரண்டு கட்சிக்குள் அங்கு உருவாகியுள்ளது.

புதுவையில் தி.மு.க. சார்பாக போட்டியிட்டு வென்ற டி.ராமச்சந்திரன் இ. காங்கிரஸ் சார்பாக வெற்றி பெற்ற பி. சண்முகம் மற்றும் புதுவையில் தி.மு.க காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் முதல்அமைச்சராகஇருந்த பருக் மரைக்காயர், (தற்போது இ.காங்கிரஸ் கட்சியில் நின்று வெற்றிபெற்றுள்ளார்.) இவர்கள் மூன்று பேர்களுக்குள்தான் முதல் அமைச்சர் பதவிக்கான போட்டி ஏற்பட்டுள்ளது.

இ. காங்கிரசில் ஒரு பகுதியினர் பருக்மரைக்காயர் தான் முதல் அமைச்சராக வரவேண்டும் என்று கூறிவருகின்றனர். அக்கட்சியைச்சேர்ந்த மற்றும் சிலர் சண்முகம் தான் முதல் அமைச்சராக வர வேண்டும் என்று கூறி வருகின்றனர்.

இதனால் இவர்கள் இருவருக்கும் அதிக போட்டி உண்டாகும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

ஆனால் இதற்கிடையில் சண்முகம் தான் டெல்லி சென்றுஇந்திராகாந்தியை சந்தித்து (முதல் அமைச்சர் பதவியை அடைய) பேசப்போவதாக அறிவித்துள்ளார். இந்திரா என்ன முடிவு எடுக்கிறாரோ, அந்த முடிவை தம் கூட்டணி தி. மு. க, இ. காங்கிரஸ் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும்அவர் கூறினார்கள்.

ஆனால் ராமச்சந்திரன் எப்படியும் முதல் அமைச்சர் பதவியை பிடிக்க வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் இருக்கிறார். அதனால் அவர் தன் கட்சியில் வெற்றி பெற்றவர் அனைவரையும் அழைத்து சென்னை வந்து கருணாநிதியை தனியாக சந்திக்க ஏற்பாடு செய்துள்ளார்.

அவர் கட்சியில் வெற்றி பெற்றவர்களில் ஒருவர் பேசும்போது இ. காங்கிரசைவிட நம் கட்சிதான் அதிக இடங்களை பிடித்துள்ளது. எனவே முதல் அமைச்சர் பதவி நம் கட்சிக்குதான் தரவேண்டும். இந்த கருத்தை கருணாநிதியிடம் கண்டிப்பாக எடுத்துச் சொல்வேன் என்று கூறினார்.

இது இப்படியிருக்க பருக் மரைக்காயர் இன்று புதுவை லெப்டினன்ட் கவர்னர் குல்கர்ணியை தனியாக சந்தித்து பேசினார். அங்கு அவர் தனக்கு இ. காங்கிரஸ் கட்சியில் அதிக செல்வாக்கு இருப்பதாகவும் அதனால் முதல் அமைச்சர் பதவி தனக்கு தான் தரவேண்டும் என்று அவரிடம் கூறியதாக தெரிகிறது ஆனால் அவரை பத்திரிகை நிருபர்கள் சந்தித்து கேட்டபோது இது மரியாதை தெரிவிக்கும் முறையில் நடந்த சந்திப்பு என்று கூறினார்.

எனவே முதல் அமைச்சர் பதவியை அடைய மூன்றுபேரும் இப்போது கடும் போட்டியில் உள்ளனர்.

### ஆவடியில் 144 தடை உத்தரவு

சென்னை, ஜன. 8- சென்னையை அடுத்த ஆவடி அம்பத்தூர், திருவொற்றியூர், எண்ணூர் மற்றும் செங்கற்பட்டு கிழக்குப் பகுதி முழுவதும்144 தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்த தடை உத்தரவு இம்மாதம் 11ந்தேதி மாலை 7 மணிவரை அமலில் இருக்கும்.

இதன்படி போலீஸாரின் அனுமதியின்றி ஊர்வலங்கள் பொதுக்கூட்டங்கள் ஆகியவை நடத்தக் கூடாது. எந்த பகுதியிலும் 5 பேருக்கு மேல்கூடி நிற்கக்கூடாது. தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டுள்ளதையொட்டி சட்டம், ஒழுங்கு குலைந்து விடாதபடியும், கலவரங்கள் நடக்காமல் முன்கூட்டியே தடுப்பதற்கும் 144 தடைஉத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளதாக போலீஸ் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

### ஆந்திராவில் இ.காங்கிரசுக்கு 40 இடங்கள்

ஆந்திராவில் 42 எம். பி. தொகுதிகளில் 40 இடங்களை இ. காங்கிரஸ் கைப்பற்றியுள்ளது. ஒரு இடத்தை அர்ஸ் காங்கிரஸ் கைப்பற்றியுள்ளது. பத்ராசலம் (ரிசர்வு) தொகுதி முடிவு எதிர்பார்க்கப்படுகிறது.

### மார்க்சிஸ்ட் வெற்றி

திரிபுரா(மேற்கு)தொகுதியில் அஜாய் பிஸ்வாஸ் (மார்க்சிஸ்ட்) வெற்றி பெற்றார். இ. காங்கிரஸ் வேட்பாளர் அசோக்குமார் பட்டாச்சாரியாவை 56 ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் அவர் தோற்கடித்தார்.

பீகாரில் ரோசேரா ரிசர்வு) தொகுதியில்) பாலேஸ்வர்ராம் (இ. காங்) வெற்றி பெற்றார். ராம்சேவக் அசாரி (லோகதளம்) 19,395 ஓட்டு வித்தியாசத்தில் தோற்றார்.

## தேர்தலில் தில்லுமுல்லு: ராஜ்நாராயணன் புகார்

வாரணாசி ஜன 8-நடந்து முடிந்த நாடாளு மன்றத் தேர்தலில் தனதுதொகுதியில் தில்லுமுல்லுகள் நடந்ததாக லோக் தளக் கட்சியின் நிர்வாகத்தலைவர் ராஜ்நாராயணன் புகார் தெரிவித்துள்ளார்.

வாராணசி தொகுதியில் கமலபதி திரிபாதியை எதிர்த்து ராஜ்நாராயணன் போட்டியிட்டு தோல்வியடைந்தார்.

தேர்தல் முடிவு பற்றி நிருபர்களிடம் பேசுகையில் ராஜ்நாராயணன்கூறியதாவது:

முழுநிலைமையையும் பரிபூரணமாக பரிசிலனை செய்த பிறகு, நாட்டில் ஜனநாயகத்தைக் காப்பாற்றுவது எப்படிஎன்பது பற்றி முடிவு செய்யப் போகிறேன்.

இந்தத் தேர்தல் முடிவுகள் ஜனநாயக விரோதமானவையாக இருப்பது மட்டுமல்ல: உண்மைக்குப் புறம்பாகவும் உள்ளன.

எனது வாரணாசி தொகுதியில் வாக்களிப்பிலும் வாக்குகள் எண்ணிக்கையிலும் ஆரம்பத்திலிருந்தே இந்திரா காங்கிரஸ் கட்சியினர் "தில்லுமுல்லு" செய்தனர்.

லோக்தா என்னுமிடத்தில் வாக்குப்பதிவு நடந்தபோது அந்த தேர்தல் அதிகாரியாக இருந்தவர் முஸ்லிம்களுக்கும் யாதவர்களுக்கும் வாக்குச்சீட்டுக்களை அளிக்க முடியாது என்று கூறினார். ஏனெனில் அந்த இருபிரிவுகளைச் சேர்ந்த வாக்காளர்கள் எனது ஆதரவாளர்களாவர்.

கோட்வாஎன்னுமிடத்திலுள்ள வாக்குச் சாவடியிலும் இதேபோன்று நடந்தது. அங்கு ஒரு கற்றை வாக்குச்சீட்டுகள் கேட்பாரற்றுக் கிடந்தது. அந்த வாக்குச் சாவடியின் தேர்தல அதிகாரி இந்திரா காங்கிரஸ் வேட்பாளரை ஆதரித்தார், அந்தத் தேர்தல் அதிகாரியை நீக்கும்படி மாவட்ட மாஜிஸ்திரேட்டிடம் நான் கேட்டுக் கொண்டேன்.

இவ்வாறு ராஜ் நாராயணன் நிருபர்களிடம் கூறினார்.

(3-ம் பக்கத் தொடர்ச்சி) போட்டியிட்ட இ. காங்கிரஸ், ஜனதா வேட்பாளர்கள்தோல்வி அடைந்தனர்.

### அசோக் மேத்தா

குஜராத் சூரத்தொகுதியிலிருந்து போட்டியிட்ட அசோக்மேத்தா தோல்வியடைந்தார்.

ராஜஸ்தானில் முன்னாள் தமிழக கவர்னர் சுகாதியா வெற்றிபெற்றார்

### சிந்தியா தோல்வி

உத்திரப் பிரதேசத்தில் ரேபரேலி தொகுதியில் போட்டியிட்ட ஜனதா வேட்பாளர் குவாலியர் மகாராணி விஜயராஜி சிந்தியா தோல்வியடைந்தார்.

தருமபுரியில் போட்டியிட்ட ஜனதாவேட்பாளர் பூவராகன் தோல்வியடைந்தார்.

# அண்ணா






## ஃ மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு

## ஃ மக்கள் தீர்ப்பை மதிக்கிறேன்

# புரட்சித்தலைவர் அறிக்கை



### இந்திராகாந்திக்குபாராட்டு-வாழ்த்து

சென்னை, ஜன. 8- மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு. மக்கள் தீர்ப்பை மதிக்கிறேன் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறியுள்ளார். நடந்து முடிந்த நாடாளுமன்றத் தேர்தலில் அமோக வெற்றி பெற்ற இந்திரா காந்திக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்து தெரிவித்துள்ளார்.

நாடாளுமன்ற தேர்தல் முடிவுகள் பற்றி முதல்வர் புரட்சித்தலைவர் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

இந்த வெற்றி அனைத்திந்திய அளவில் திருமதி இந்திராகாந்தி அம்மையார் அவர்களுக்கு கிடைத்துள்ளவெற்றி ஆகும்.

இந்த இரண்டரை ஆண்டுகளில் அனுபவித்த சந்தித்த துன்பங்களினால் இந்திய மக்களுக்கு அவர் மீது ஏற்பட்ட அனுதாபத்தின் பிரதிபலிப்பாக இந்த வெற்றி அமைந்துள்ளது.

"மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு" என்பது தான் பேரறிஞர் அண்ணா அவர்கள் எங்களுக்கு கற்று தந்திருக்கும் அரசியல் நெறி.

காலஞ் சென்ற பெருந் தலைவர்காமராஜர் 1967ம் ஆண்டு தேர்தல் முடிந்தவுடன் "மக்கள் தீர்ப்பை நான் மதிக்கிறேன்" என்று கூறியதையும் நான் நினைவு படுத்த விரும்புகிறேன்.

எனவே மக்கள் தீர்ப்பை பெற்றுள்ள இந்திரா காந்தி அம்மையாருக்கு அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் பாராட்டுதலையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு புரட்சித்தலைவர் தன் அறிக்கையில் கூறியுள்ளார்.

## புதுவை: 65 பேர் டெபாசிட் இழப்பு

பாண்டிச்சேரி, ஜன. 8- புதுவையில் நடைபெற்ற 30 சட்டசபை தொகுதிக்கான தேர்தலில் 132 பேர் வேட்பாளர்களாகப் போட்டியிட்டனர்.

இந்த 132 பேர்களில் 65 பேர் டெபாசிட் இழந்தனர்.

டெபாசிட் இழந்தவர்களில் 45 பேர் சுயேச்சையாக போட்டியிட்டவர்களாகும்.

அர்சு காங்கிரஸ் கட்சி வேட்பாளர்கள் 6 பேர், மக்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் 4 பேரும், ஜனதா கட்சியினர் 2 பேரும் இந்திய கம்யூனிஸ்டுகட்சியினர் 2பேரும் அனைத்திந்திய அண்ணா தி. மு. க. வேட்பாளர் ஒருவரும், தி.மு.க. வேட்பாளர் ஒருவரும் டெபாசிட் இழந்தனர்.

## சென்னையில் கிரிக்கெட் போட்டி: 19ந்தேதி விடுமுறை

சென்னை, ஜன. 8- இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையேயான 5-வது கிரிக்கெட் "டெஸ்ட்" பந்தயம் 15ந்தேதி சென்னை சிதம்பரம் மைதானத்தில் தொடங்குகிறது.

20-ந்தேதிவரைபோட்டி நடக்கிறது. இடையில் 18-ந் தேதி ஓய்வு நாள்.

கிரிக்கெட் பார்ப்பதற்கு வசதியாக, சென்னையிலுள்ள மத்திய அரசு அலுவலகங்களுக்கு 19-ந்தேதி விடுமுறை நாளாக அறிவிக்கப்பட்டு உள்ளது. அதற்குப்பதிலாக ஜனவரி 12-ந் தேதி சனிக்கிழமை விடுமுறை இல்லை. எல்லா மத்திய அரசு அலுவலகங்களும் அன்று பணிபுரியும்.

## கருநாடக முதல்வர் தேவராஜ் அர்ஸ் ராஜினுமா செய்தார்

பெங்களூர், ஜன. 8- கருநாடக முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ் நேற்று இரவு தனது பதவியை ராஜினுமாச் செய்தார்.

நாடாளுமன்றத் தேர்தலில் கருநாடக மாநிலத்தில் தேவராஜ் அரஸ் காங்கிரஸ்கட்சிதோல்வியடைந்தது.

கருநாடகத்திலுள்ள 28 தொகுதிகளில் எல்லாத் தொகுதிகளிலும் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்றது.

இதன்காரணமாக தேவராஜ் அர்ஸ் பதவியை ராஜினுமா செய்தார்.

நேற்று மாலை அவர் கவர்னரை சந்தித்து ராஜினுமா கடிதத்தை கொடுத்தார்.

சட்டசபையை கலைக்கும்படி அர்ஸ் சிபாரிசு செய்யவில்லை. எனவே, சட்டசபை கலைக்கப்படமாட்டாது.

சட்டசபை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 225. அவர்களில்



அர்ஸ் காங்கிரஸ் உறுப்பினர்கள் 129 பேர். இந்திரா காங்கிரசார் 64 பேர்.










தங்கமணி பப்ளிகேஷனுக்காக '275, அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனுல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை 600004.

ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி.